வயிரிசைமு ழக்கமிகு மழைதவழ்கு றிச்சிதொறு, மகிழ்குரவை புட்டிரியும் வேடிக்கை வேடுவனும் *

மரகதம ணிப்பணியி னணிதழைபு டுத்துலவும், வனசரர்கொ டிச்சிதனை யாசிக்கும் யாசகனும் *

மதனன்விடு புஷ்பசர படலமுட லத்தனையு, மடலெழுதி நிற்குமதி மோகத் தபோதனனும் *

வரிசிலைம லைக்குறவர் பரவியபு னத்திதணின், மயிலென விருக்குமொரு வேடிச்சி காவலனே. (1)

வேடிச்சிகாவலன்வகுப்பு முற்றிற்று.

---

பதின்மூன்றாவது

# சேவகன் வகுப்பு.

தனதன தனன தனதன தனன தனதன தனன தனத்தா னன *

இருபிறை யெயிறு நிலவெழ வுடல மிருள்படு சுருப முடைக்கோ விடசே *

இறுகிய [illegible] படலினை முடுகி யெமபடர் பிடரி பிடித்தே கொடுபோய் (¼)

அருமறை முறையின் முறைமுறை கருதி யதரிடை வெருவ வெற்றுத்தால் வகையால் *

அறிவொடு மதுர மொழியது குழறி யலமரு பொழுதி லழைத்தால் வருவாய் (½)

ஒருபது சிரமு மிருபது கரமும் விழவொரு பகழி தொடுத்தோன் மருகா *

உரமதூ பெரிய திரிபுர மெரிய வுயர்கன கிரியை வளைத்தோர்
புத்லீவா (¾)
மருவள ரடவி வனிதையர் பரவ மரகத விதணி லிருப்பாள்
கணவா *
வளைகடல் கதற நிசிசரர் மடிய மலையொடு பொருத முழுச்சே
வகனே. (1)
சேவகன்வகுப்பு முற்றிற்று.

---

பதினொன்காவது

## வேல்வாங்குவகுப்பு.

தனதன தந்தன தனதன தந்தன தந்தன தானந்தன தானந்
தன *
திடவிய நெஞ்சுடை யடியரி டும்பைகெ டும்படி தீயாங்குறை
போயாழ்ந்தது *
செயசெய வென்றிசை பரவிய வெங்கள்கொ டுங்கலி தேசாந்
தர மேசாய்ந்தது *
செயலுரை நஞ்சுறழ் மயலுறு நெஞ்சினர் வஞ்சகர் தீமான்கதர்
தாமேங்கினர் *
சிகரத ரங்கித மகரநெ ருங்குபெ ருங்கட னீரேன்றெழீன் வாய்
மாண்டது *
தெரியலர் சென்றடை திசைகளி லெண்கரி சிம்பெழ மாருங்
கிரி நாருந்துளை *
சிகரநெ டுங்கிரி குகைகடி றந்துதி கந்தமும் லோகாந்தமு நீர்
தேங்கின *
சிறையுள ழுந்திய குறைகளொ ழிந்துசெ யங்கொடு தேவேந்
திரர் சேணுண்டனர் *

திரிபுவ னங்களு மொருபய மின்றிவ ளங்கெழு சீர்பூண்டவ
சேர்பூண்டன (¼)

விடவச னஞ்சில பறையும்வி ரிஞ்சன்வி லங்கது கால்பூண்டு
தன் மேறீர்ந்தனன் *

விகசித சுந்தர விதரண வைந்தரு வெந்தெழில் வீவான்பொ
ழில்பூவாய்ந்தது *

விழைவுத ரும்பத சகிதன்வி ளங்கிய மங்கல நூல்வாங்குகி
வாள் வாழ்ந்தனள் *

வெருவியொ துங்கிமை யவரெவ ருஞ்சிறை வென்றித மேலாம்
படி யேமீண்டனர் *

விழியொரி ரண்டொரு பதுசத நின்றெறி கண்டகன் மேல்வா
ங்கிலோ கால்சாய்ந்தது *

வெளிமுழு துந்திசை முழுதும்வி ழுங்கியெ ழுங்கன ஞூர்மாண்
டற வேர்மாய்ந்தது *

விபுதர்ப யங்கெட நிருதர்த ளங்கெட விண்கெடு மேடாம்படி
பாடோங்கின *

மிடைகுறள் வெங்கொடி கழுகுப ருந்துவி ருந்தென வூனார்ந்த
கல் வானார்ந்தன (½)

அடவிபு [illegible]டை மவுலியில் வெம்பணி யம்பணி யாமாங்கதர்
வாமாங்கலே *

அனுபவை யம்பிகை யனுதிதை யம்பைத்ரி யம்பகி யாசாம்
பரை பாசாங்குசை *

அனகைய சஞ்சலை யதிகுண சுந்தரி யந்தரி காலாந்தகி மேலாந்
திரு *

அமலைய லங்கிர்தை யபிநய பங்குரை சங்கினி மாணுங்கணி
ஞானங்குரை *

அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்தவி ளைந்தழல் வாய்கான்
றிடு நாகாங்கதை *

அபயவ ரம்புரி யுபயக ரந்திக ழுந்தணி யாமாங்கறி தாய்மாண்
பினள் *

அறுலைத ருந்திரு மதலையி பங்கொள்ப யங்கொடு பாய்மாண்
கலை வாய்மாண்புன *

அணிகுற மின்புணர் தணிகையி லந்தண னிந்திர ராசாங்கம
தாராய்ந்தவன் (¾)

வடவையி மெம்படி மணிமுடி பஞ்செழ விஞ்சிய மாடாம்புடை
நாடாண்டகை *

வசைகரு துங்குரு பதியொடு தம்பிய ரும்பட வேபாண்டவர்
தேரூர்ந்தவன் *

வளவில்வ ளர்ந்திடை மகளிர்கு விந்துத டங்குடை வார்பூந்து
கில் வார்பூம்புயல் *

வரைநிரை கன்றின முழுதும யங்கிய பண்கெழு வேயேந்திய
வாயான்கழல் *

மருதிடை சென்றுயர் சகடுதெ டிந்தடர் வெம்புளை வாய்கீண்
டொரு பேய்காய்ந்தவன் *

மதசயி லம்பொர வரவிடு கெஞ்சினில் விஞ்சுக மாயான்பகை
கோமான்றிரு *

மருககனி ரம்பிய மதிமுக மஞ்சரி குஞ்சரி வாகாம்பரை தேர்ய்
காங்கெயன் *

மகபதி தன்பதி பகைகிழி யும்படி யன்றடல் வாளோங்கிய
வேல்தாங்கவே. (1)

வேல்வாங்குவகுப்பு முற்றிற்று.

---

பதினைந்தாவது

# புயவகுப்பு.

---

தனதன தனன தனதன தனன தனதன தான தான தனதன
தத்தன தந்த தந்த தந்த தானத் தனந்தன *

வசைதவிர் ககன சரசிவ கரண மகாவிர்த சீல சால வரமுனி
சித்தரை யஞ்ச லஞ்ச லென்று வாழ்வித் துநின்றன *

மணிவட மழலை யுடைமணி தபனி யநாண முகாக நாடி வகை
வகை கட்டிம ருங்கு டன்பொ ருந்து ரீதிக் கிசைந்தன *

வருணித கிரண வருணித வெகுத ருணபத சோதி யாடை
வடிவுபெ றப்புனை திண்செ ழுங்கு றங்கின் மேல்வைத் தசைந்தன

வளைகட லுலகை வலம்வரு பவுரி விநோதக லாப கோப மயில்
வத னத்துவி ளங்கு மங்கு சங்க டாவிச சிறந்தன *

வரையக நிருதர் முடிபக மகர மகோததி தீயின் வாயின் மறுகவி
திர்த்தயில் வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன *

மதியுன [illegible]வியென வளைப டுதோல்வி சால நீலு மலிபரி
சைபபடைவகாணைய நின்று மூன்று சாதிக்க முந்தின *

மனகுண சலன மலினமி றுரிய வதீதசு கானு பூதி மவுனதி
ரக்ஷா மந்தி ரம்பொ ருந்தி மார்பிற் றிகழ்ந்தன *

வகைவகை குழுமி மொகுமொகு மொகென வநேகச மூக ராக
மதுபம்வி மூச்சிறு சண்ப கஞ்செ றிந்த தாரிற் பொலிந்தன (1/4)

மிசைமிசை கறுவி வெளிமுக டளவு கிசாசர சேனை தேடி வித்
திபெ றச்சில கங்க ணங்க றங்க மீதிற் சுழன்றன *

வெருவுவ வெருவ வெரிசொரி விழியு ளபூதபி சாசு போத மிகு
த்தானி பற்றிமு ழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன *

விதமிகு பாத சுரவனி தையர்க ணமேமெருறும் லீலை யாக விம
லச லத்தினை விண்டிறந்து மொண்டு வீசிப் பொலிந்தன *

விதரண தருவின் மலரிடை செருகி யகுடதள நீப மாலையப்பு
தற்கு லக்குலி சன்ப யந்த செங்கை யானைக் கிசைந்தன *

விகசித தமர பரிபுர முளரி தொழாவபி ராம வேடர் விழலகிரி
னைப்புன மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன *

விதிர்தரு சமா முறிகர கமல நகாயுத கோழி வீற விதரண சித்
ரவ லங்கிர் தம்பு னைந்து பூரித் திலங்கின *

விரகுடை யெனது மனதுட னகில்ப னிநீர்புழு கோட ளாவி
மிர்கமத கர்ப்புர குங்கு மங்க லந்து பூசித் துதைந்தன *

வினைபுரி பவனி தொழுதழு துருகி யகோதையர் தூது போக
விடுமது பக்ஷண வண்டி னந்தி ரண்டு சூழப் படிந்தன (½)

இசைதனி லினிய கயிசிகை கவுட வராளிசு ஏறி தேசி பயிரவி
குச்சரி பஞ்சு ரந்தெ ரிந்து வீணைக் கிசைந்தன *

இறுதியி லுதய ரவிகண நிகரெ னவாறிரு காது தோயு மிலகும
ணிக்கன விம்ப குண்ட லங்கண் மேவிப் புரண்டன *

எதிர்படு நெடிய தருவடு பெரிய கடாமுமிழ் நாக மேக மிடிபட
மற்பொரு திண்சி லம்ப டங்க மோதிப் பிடுங்கின *

எழுதரு மழகு நிறமலி திறலி சையாகவு தார தீர மெனவுரை
பெற்றவ டங்க லுஞ்சி றந்து சாலத் ததும்பின *

இருள்பொரு கிரண விரணிய வடகு லபாரிய மேரு சாதி யின்
மென வொத்துல கங்க ளெங்க ணும்ப்ர காசித்து நின்றன *

இயன் முனிபரவ வொருவிசை யருவ ரையூடதி பார கோர
.விவுளிமு கத்தவள் கொங்கை கொண்ட சண்ட மார்பைப்
பிளந்தன *

இபரத துரக நிசிசரர் கெடவொ ருசூரனை மார்பு பீறி யவனுதி
ரப்புனல் செங்க ளந்து ளங்கி யாடிச் சிவந்தன *

..எவையெவை கருதி லவையவை தருகொ டையான்மணி மேக
-ராசி சுரபிய வற்றொடு சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன (¾)

அசைவற நினையு மவர்பவ மகல வெமேல்வரு கால தூதரையு
டையு மப்படி யங்கு மிங்கு மெங்கு மோடத் துரந்தன *

அகிலமு மெனது செயலல திலையெ னயானென வீறு கூறியற
வுமி குத்தெழு மைம்பு லன்றி யங்கி வீழத் திமிர்ந்தன *

அனலெழு துவச முடுகுல முதிர வியோமமு மேழு பாரு மச
லமு மிக்கபி லங்க ளுங்கு லுங்க வாலித் ததிர்ந்தன *

அடலொடு [illegible] தளமது மடிய வலாரிதன் வானை யாள வரசு
கொ டுத்தப் யம்பு குந்த வண்ட ரூரைப் புரந்தன *

அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ் கோடல்
பாட லளிமுரல் செச்சைய லஙகல் செங்க டம்பு நேசித் தணிந்
தன *

அரியதொர் தமிழ்கொ டரிமையொ டடிதொ ழுதேகவி மாலை
யாக வடிமைதொ டுத்திடு புன்சொ லொன்று நிந்தியாமற் புனைந்
தன *

அழகிய குமா னுமைதிரு மதலை பகீரதி மாதர் வாழு மறுவர் ப்ரியப்படி கந்த னெந்தை யிந்த்ர நீலச் சிலம்பினன் *
அனுபவ னனக னனனிய னமல னமோகன னேக னேக னபி னவ னித்திய னஞ்ச லென்ப்ர சண்ட வாகைப் புயங்களே. (1)

புயவகுப்பு முற்றிற்று.

---

பதினாறுவது

# சித்துவகுப்பு.

தனன தந்த தான தனன தந்த தான, தனன தந்த தான தனன தந்த தான *

தனன தனதான தானன தந்த, தனன தனதான தானன தந்த *

தான தானன தனதன தந்தன, தான தானன தனதன தந்தன *

தனன தானன தனதன தானன, தனன தானன தனதன தானன *

தனன தனந்தன தந்தன தானன, தனன தனந்தன தந்தன தானன *

தானன தனதன தானந் தந்தன, தானன தனதன தானந் தந்தன *

தனதன தனதன தனன தத்தன, தனதன தனதன தனன தத்தன *

தத்த தந்த தான தத்தானன, தத்த தந்த தான தத்தானன *

தனன தத்தான தனதன தந்தன, தனன தத்தான தனதன தந்தன *

தானதன தானனு தாந்தன, தானதன தானனு தாந்தன *

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன, தனத்தன தனத்தன தனத்தன தனத்தன *

தான தாத்தன தத்தன தத்தன, தான தாத்தன தத்தன தத்தன *

அடல்பு ரிந்த வேலு மயிலு மென்றும் வாழி, யரிய தொன்று கூற வருகி ருந்து கேண்மின் *

அளவில் பலகாய மோடாடி யண்ட. ரறிய விளையாட லாமூலி யொன்றில் *

ஆசை வேறிலை யறுமுக வன்திரு, வாணை மேருவை யடிதலை கண்டனம் *

அகில லோகமு மடைவடை வேமுத, லருளி னேமது சிவனறி யாதல *

அமையு மெனும்படி நின்றம ஞேரத, மவைமு ழுதுந்தரு வம்பத ருதுகொள் *

ஆதியு முழுவும் வானந் தந்தரு, மாறிரு கரதல நாதன் றந்தவை *

அவுஷத முளசில இலுகி லுப்பைக, ளரசிலை கறுவிலி கரிய கெக்கரி *

அத்தி செம்பி ராகை முட்காவளை, தத்தி சங்க மோரி தழ்த் தாமரை *

அவுரி கற்றாழை யொடுவைகு றிஞ்சிலி, சிவிறி கத்தாரி பொடுதலை சண்பகம் *

ஆரைகொடு வேலிவேல் காஞ்சிரம், வீரையிரு வேலியே ரீந்திலை *

அமுக்கிணை யெருக்கிலை முருக்கிதழ் செருப்படை, யகத்தித மரத்தைம தமத்தமொ டுபித்திகை *

ஆல மாத்திக டுக்கைகொ டிக்கழல், கோலி தேட்கொடை நெய்க் கொடை வக்கணை *

அகில் பரம்பை காரை துடரி தும்பை சூரை, யலரி சம்பு நாவன் மருது சிந்து வாரம் *

அறுகு தழுதாழை மாபாலை புன்கு, புரசு பழுபாகல் பூலாவ ழிஞ்சில் *

ஆயி லாவிரை யிறலியி ரும்பிலி, யாடி யாவணி படப்பிட வென் றழை *

அவனி பாடல மனலம கீருக, மிவைச மூலமு மெழுபது சாலடை *

அதிம துரந்தக ரஞ்சிறு பாலடை, பதிமுக வெந்திய மின்கய மோதகம் *

ஆறிடை யபினரி தாரங் கந்தக, நூறிடை திரிபலை யோரொரன் றெண்பலம் *

அறுவிட யமுமொழி கிருமி சத்ருவு, மனின்முமுறு தமுமற முறுகு துத்தமும் *

அற்ப மொன்று கீரை வித்தேழிடை, யத்தி லொன்று பூநீ தக்கோலமும் *

அடவி கச்சோல கிமிளைந றும்பிசி, னரிதம் வெட்பாலை யரிசிக ருங்கணி *

ஆமலக மேலநான் மூன்றிடை, சேமசிலை கூடலோ காஞ் சனம் *

அரப்பொடி கடிப்பகை விடத்திர ணமப்பிர, கசத்தைச தருப்பிலி தைகொத்தம லிதிப்பிலி *

ஆலி கோட்ட மெலிப்பகை சச்சிலே, நீலி காய்சசு நிலப்பனை நற்பிசின் (¼)

மடல்சி ந்த தாழை மணவ சம்பு நீலம், வருகு ரும்பை கோட மபி ராணி *

மரிசி வசவாசி காகீச மஞ்சண், மகிழ விதைமேதை மாமே தை குன்றி *

வாரி வாய்நுரை சயில சலம்புரி, பூரி வாதுமை சணவுபெருங் குமிழ் *

வடுவில் சீரக பலமயி ரோசனை, கடுகு ரோகணி சிவிதைம ஞே சிலே *

வகைவகை கொண்டொரு மண்டல மோரொடு, குகையினி லெண்பது செம்பினி லூறவை *

வாதநல் வழிகள நேகம் பண்டையில், வாகட மலகுரு நாதன் றந்தது *

வழிபடு மரியா பிரம ருட்பட, மொழிகிற வகையிது சிறிது பெற்றிலர் *

முற்று மிந்த்ர சால முச்சாடன, முற்று மிங்ங னேத ரத்தாழ் விலே *

மதலே யர்க்கிது மொழிவது பண்பல, கதலி னிற்றூழை யிடுபய மொன்றலே *

வாலுழுவை யோரிகா ராம்பசு, வாலின் மயிர் கீரிதே வாங் கழை *

மரித்தவர் சனித்தகு ழியுப்புறு சலத்தினே, வடித்தினி தெடுத் தொரு குடத்தினி னிறைத்துவை *

மாறி ரோத்திர வித்தைப வித்திடின், மாடை சேர்க்கவ ருத் தமு னக்கிலை *

மணம தின்று நாளை யெனமொ ழிந்து சேளு, மனைக ளெங்கு மோடி யினிவி ரைந்து தேடு *

வளையல் குழைபீலி காலாழி தண்டை, மணிவ யிரவீடு மேலீடு செம்பொன் *

வாளி பாடக மணிபிறை சங்கிலி, பாளை சூடக மயில மிலம்பகம் *

மவுலி நூபுர மயிறிரு வாசிகை, சவடி தோள்வளை முகவளை மேல்வளை *

மரக தகுண்டலம் வெண்டய மேகலை, யரசி லைகம்பிகு றுங் குணி சாலகம் *

வாரணி யுடைமணி யாரங் கிங்கிணி, வாகுவ லயசெளி பீடங் கண்டிகை *

மணிமக ரிகைவளை திகிரி பட்டிகை, பணிகளி லழகிய பணி கள் கொக்கிகள் *

வட்ட வம்பொ னோலை முத்தாவளி, சுட்டி சந்து காறைபைக காறைகள் *

வடக முத்தோலை யரைவட முஞ்செறி, கட்கம் வித்தார மக ரகொ டுங்குழை *

மாதரணி தாலிநூல் காஞ்சன, மாலிகை மதாணப தாம் பரம் *

மகிப்பரி யகைச்சரி சரப்பணி யிலைச்சினை, பதக்க மிவை யுட் பட வணிப்பட லமிட்டுவை *

.மாடை பாட்டிபு னைத்தரு டப்பண, மோடு கூட்டியு ருக்கவி ருப்புடன் (½)

இடுப்ர சங்கி யாம லூலைய னந்த கோடி, யெரியில் வெந்திடாத கரிநி ரம்ப வேணும் *

இதுபழைய கவுரி பாஷாண வுண்டை, யிடுச கலவேதி பூநாக செம்பின் *

ஈய மரங்கொ ரிரதமு மெண்பல, மேழுகோடியு மிரவுசி லுந்திடுக் *

யமுனை நீர்கொடு குகைபதி னுயிர, மிறுக வேசமை நிலவறை பூநிவை *

எழுப தொர்டெண்பது வண்டியி லேபத, ரிடுகொ டுவந்துசொ ரிந்துகு வாலிடு *

யாமொழி படரச வாதந் தந்தன, நீசிவ குருவுப காரங் கண்டிரு *

இரதமொ டுருகிய சருகு பித்தளை, யிவையிவை குகை தொறு மிடைந றுக்கிவை *

எற்ற வந்தி ராது பொய்க்காளல, வெட்டி ரண்டு மாறு த்ப் பாதுகொள் *

எழுப தக்கோணி புடமுள செங்களம், ரணமு கத்தானை படையொடு வந்திரு. *

ஈழும்வெகு கோடியா னீந்திட, வேழுநீல மாடநீ மேய்ந்து கொள் *

இபத்திர ளுரித்தன பருத்தன துருத்திக, ளிலக்கற வுனக்கருடுகிலை சடக்கென *

யாவும் வரய்ப்பது சத்யமு னக்கிலை, யேழு நாட்டரு மெத்தவி லைத்தனம் *

இறைவர் குன்ற மானை மணம கிழ்ந்த நாளி, லினையி லண்டரோடு முணவு கொண்ட தாகும் *

எமது பசிதீர மாராச விந்த்ர, வமுது படைபோத வாகாச கங்கை *

யாறு போலநெய் சொரிவட கம்படை, நூறு சாலொடு பொரி யலை யிங்கமை *

இடுக மாவடு வடையிடை கீரையி, லவண மீறிய கறியடை வேபடை *

இருப துதண்டையுடு ம்புகு வால்சமை, துருவை கள்பன்றிச மைந்தவெ லாமமை *

யாமையை யமைமுய லாணங் கண்டறி, யோமிது சிவசிவ வேமெலங் கும்படை *

இடைவெளி யறமிகு விடுக ருக்கலை, யிறவகை கயல்கெளி றிவைபொ டித்தன *

எட்டு வண்டி வாளை யிப்பிலியி, லிட்ட முண்டு தியன் முற்பா டமை *

இடைகொ மூப்பாடி விளையவெ லும்புட, னடைசு ரைக்காயி லடுபடை முன்கறி *

ஈறுபுளி வார்விடாய் போம்படி, யேடுபிரி யாதபா ரேனெ சொரி *

இருக்கிற சருக்கரை வருக்கைக தலிக்கனி, ரசத்தினை யினைத் தையு மிலைக்குள டையப்படை *

ஈக பாக்குடன் வெற்றிலை கர்ப்புரம், யாரு மேத்த வினிச்சுக முற்றிரு (௪)

மிடைத ரும்ப்ர வாள சடைபெ ரும்ப்ரவாக, விமலர் கொன்றை மாலை தருண சந்த்ர ரேகை *

விரவு மணநாறு பாதார விந்த, விதர ணவிநோத மாதாவின் மைந்தன் *

மீன கேதன னுருவின்மி குந்தரு, டான வாரிதி சரவண சம்பவன் *

விகிர்தி வேதனன் மவுனசு காதன, னகில கார ண னகிலக லாதரன் *

விகசி தசுகதர சந்தன பாளித, மிர்கம தகுங்கும கஞ்ச பயோதரி *

வேழமு முழைகளு மாரும் பைம்புன, மேவுறு குறமகண் மேவுந் திண்புயன் *

விரிகட றுகளெழ வெகுளி விக்ரம, னரிதிரு மருமக னறுமுகத்தவன் *

வெட்சி கொண்ட தோளன் வெற்பூடுற, விட்ட வென்றி வேன்மு ழுச்சேவகன் *

விரவு நக்கீரர் சரணென வந்தருண், முருக னிட்க்ரோத முனிகுண பஞ்சரன் *

மேதகுபு ராணவே தாங்குர, ஞேதரிய மோனஞா னங்குரன் *

மிகைத்தவர் புரத்ரய மெரித்தவர் ப்ரியப்பட, வகஸ்திய முனிக்கொரு தமிழ்த்ரய முரைத்தவன் *

வேத மூர்த்தி திருத்தணி வெற்புறை, சோதி கார்த்திகை பெற்ற விளக்கொளி *

வெகுளி வென்ற வேள்வி முனிவர் சங்க மேற, விரவு மிந்த்ர சிராமூர்த்தி றந்த மீளி *

மிகவி ருதுகூறு மேவார்கள் கண்டன், விகட வசுரேசர் சாமோது சண்டன் *

மேக வாகன மிகுமத வெங்கய, பாக சாதன னகரிபுரந்தவன் *

விபுத தாரகன் விபுதநி வாகரன், விபுத தேசிகன் விபுதசி கா மணி *

விபரி தகஞ்சவி ரிஞ்சப ராமுக, னபின வகர்தன டைந்தவர் தாபரன் *

மேருவை யிடிபட மோதுஞ் சங்க்ரம, தாரகன் மகுடவிபாடன் புங்கவன் *

வெயிலுமிழ் கொடியொடு வினைமு கத்தினின், மயின்மிசை வருமொரு வரத னிர்ப்பயன் *

வித்த கன்சு வாமி நிர்ப்பாவகன், சத்தி யன்ப்ர தாப வித்தி யாதரன் *

விரத நட்பாளர் பரியும சஞ்சல, னிருத நிட்டூர னிருதர்ப யங் கரன் *

வீரமத லோகவேள் காங்கெயன், சூரரண சூரசு ராந்தகன் *

வினைப்பகை யறுப்பவ னினைத்தது முடிப்பவன், மனத்துயர் கெடுத்தனை வளர்த்தருள் கிர்பைக்கடல் *

வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர், சீல மேத்திய சித்தப்ர சித்தரே. (1)

சித்துவகுப்பு முற்றிற்று.

---

பதினேழாவது

## கடைக்கணியல்வகுப்பு.



தனதன தனந்த தத்த தனதன தனந்த தத்த தனதன தனந்த தத்த தானனு *

அலைகடல் வளைந்து நித்த வெழுபுவி புரந்தி ருக்கு மரசென நிரந்த ரிக்க வாழலாம் *

அளகைய ரசன்ற னக்கு மமரா ரசன்ற னக்கு மரசென வூற
ஞ்செ லுத்தி, யாளலாம் *

அடைபெறு வதென்று முத்தி யதுமது ரசெந்த மிழ்க்கு மரு
ள்பெற வினைந்து சித்தி, யாகலாம் *

அதிரவ ருமென்று முட்ட வலகில்வி னைசண்டை நிறக வட
விலகிர் புரிந்து வெற்றி, யாகலாம் (¼)

இலகிய நலஞ்செய் புட்ப கமுமுட னிறம்வெ ளுத்த விபவர
ஞெனும்பொ ருப்பு, மேறலாம் *

இருவர வர்வின்றி டத்து மெவரெவ ரிருந்தி டத்து மொருவ
னிவனென்று ணர்ச்சி, கூடலாம் *

எமபடர் தொடர்ந்த ழைக்கி லவருட னெதிர்ந்து ளுட்க விடி
யென முழங்கி வெற்றி, பேசலாம் *

இவையொழி யவும்ப லிப்ப தகலவி டுமுங்கள் வித்தை யினை
யினி விடும்பெ ருத்த, பாருளீர் (½)

முலையிடை கிடந்தி ளைப்ப மொகுமொகெ னவண்டி ரைப்ப
முகையவிழ் கடம்ப மத்த, தாரினன் *

முதலிபெ ரியம்ப லத்துள் வரையச லமண்ட பத்துண் முனி
வர்தொ ழுவனுறு நிர்த்த, மாடினன் *

முனைதொறு முழங்கி யொற்றி முகிலென விரங்க வெற்றி
முறைநெறி பறந்து விட்ட, கோழியான் *

முதியவு ணரன்று பட்ட முதியகு டர்நன்று சுற்று முதுகழு
குபந்த ரிட்ட, வேலினன் (¾)

மலைமரு வுபைம்பு னத்தி வளருமி ருகுன்ற மொத்தி வலிகுடி
புகுந்தி ருக்கு, மார்பினன் *

மழலைகள் விளம்பி மொய்த்த வறுவர்மு லையுண்டு முற்றும் வடி
வுடன் வளர்ந்தி ருக்கும், வாழ்வினன் *

மூலையிறை மடந்தை பெற்ற வொருமத லையென்று நித்து மலை யிடி யவுந்து ணித்த, தோளிஞன் *
மயிலையு மவன்றி ருக்கை யயிலையு மவன்க டைக்க ணியலையு நினைந்தி ருக்க, வாருமே. (1)

கடைக்கணியல்வகுப்பு முற்றிற்று.

---

பதினெட்டாவது

# சிவலோகவகுப்பு.

தனதன தனதன தனதன தனதன தந்தன தந்தந் தாத்தன தந்தந், தனதானன *
உரகமு மிதழியு முதகமு முபெதி யும்புனை யும்பஞ் சாட்சரர் பங்கின், கொடிதாளினில் *
உலகமு மலைகளு முததியு முயிரும டங்கவொ டுங்கும் பார்ப் பதி மைந்தன், கமலாலயன் *
உபநிட முடிவினு மிடபம தனிலுமு யங்கிவ யங்குஞ் சீர்ப்பதி யொன்றென், றவிதாவென *
உறைவிடு படையின னடலுடை நிசிசரர் தண்டமு டைந்தங் கார்ப்பெழ வகைகம், பொருசேவகன் (1/4)
வரபதி சுரபதி சரவண மடுவினில் வந்தருள் கந்தன் கார்த்தி கெ யன்செய், கழுநீர்மலர் *
மருவிய குருபரன் வனசரி பதயுக கஞ்சம்வ ணங்கும் பாக்யக தம்பன், கருணாகரன் *
வடதரு விலையிலும் வெகுமுக மவுலிய னந்தனெ னுஞ்செஞ் சேக்கையி லுங்கண், டுயின்மாறிரு *

மருமக னிமையவர் வழிபடு மணியணி கிங்கிணி பண்கொளு
.ரர்த்திசை கொஞ்சும், பதசூடிகை (¼)

அருவுரு வொழியவொ ரபினவ வடிவரு ளூர்தனி யர்தந் தீசைக்கு
ழிய னுங்குண், டலபூஷணம் *

அணிமய மெனுமொரு சிவிகையொ டதிகுண மஞ்சினு மஞ்
சோன் ருக்கிய தென்பொங், கரியாசனம் *

அறநெறி முறைமையி லொழுகிய வழகிய பண்பெனு மம்
பொன் சேர்த்தக லிங்கஞ், சயசாரமும் *

அவனவ ளதுவென மொழியவு மிலதொரு வன்பிணி யுங்
கொண் டாக்கமு மின்பங், களுமேதரும் (¾)

இரவலர் மிடிகெட வுதவிய விதரண கங்கண மிங்கங் காப்
பிலெ னுஞ்சுர், தரகாகளம் *

எனதறு துறவினு முயர்கொடை யவிரத சங்குல கெங்குங்
கேட்டுவ ழங்கும், பொறைமாமுர *

சிமையவர் கணமுனி கணமுட னினிதுப்ர பஞ்சமி றைஞ்சுங்
கீர்த்திது ரங்கந், திறல்வாரணம் *

இருவினை கெடவொரு நிரமய பரமவு னந்தரு மின்பந் தேக்
கிய வன்பிற்கு சிவலோகமே. (1)

சிவலோகவகுப்பு முற்றிற்று.

பத்தொன்பதாவது

## மயில் வகுப்பு.

தானதன தநதன தானதன தந்தன தானதன தந்தன,
தந்த தனன *

ஆதவனு மம்புலியு மாசறவி ழுங்கியுமி ழாலமரு வும்பணியி,
ரண்டு மழுதே *

ஆறுமுக னைந்துமுக ஞானமுக னெங்கடவு ளாமெனமொ
ழிந்தகல, வென்று விடுமே *

ஆர்கலிக டைந்தமுது வானவர ருந்தவரு ளாதிபக வன்றுயில,
னந்தன் மணிசேர் *

ஆயிரமி ருந்தலைக ளாய்விரிப ணங்குருதி யாகமுழு துங்குலைய,
வந்த றையுமே (¼)

வேதமுழு தும்புகலி ராமனொரு தம்பியிசை வீடணன ருந்த
மையன், மைந்த னிகலாய் *

வீசுமர வஞ்சிதறி யோடவரு வெங்கலுழன் மேலிடி யெனும்
படிமு, ழங்கி விழுமே *

மேதினிசு மந்தபெரு மாசுணம யங்கநக மேவுசர ணங்கொடல,
கெங்கு முழுமே *

வேலியென வெண்டிசையில் வாழு முரகந்தளர வேயழலெ
னுஞ்சினமு, டன்ப டருமே (½)

போதினிலி ருந்தகலை மாதினை மணந்தவுயர் போதனை யிரந்து
மலர், கொண்டு முறையே *

பூசனைபு ரிந்துகொடி யாகிமகி ழொன்றுதுகிர் போன்முடிவி
ளங்கவரு, மஞ்ச மடமே *

பூதரொடு கந்தருவர் நாதரொடு கிம்புருடர் பூரணக ணங்க
ளொடு, வந்து தொழவே *

போரிடுவ வென்றுவெகு வாரணக ணங்களுயிர் பேருமினமெ
னும்படியெ, திர்ந்து விழுமே (¾)

கோதகலு மைந்துமலர் வாளிமத னன்பொருவில் கோலவுட
லங்கருகி, வெந்து விழவே *

கோபமொடு கண்டவிழி நாதரணி யும்பணிகள் கூடிமன மஞ்சி
வளை, சென்று புகவே *

கூவியிர வந்தமுணர் வாழியென நின்றுபொரு கோழியெர்டு
வென்றிமுறை, யும்ப கருமே *

கோலமுறு செந்திநகர் மேவுகும ரன்சரண கோகனத மன்
பொடுவெ, ணங்கு மயிலே. (1)

மயில்வகுப்பு முற்றிற்று.

---

இருபதாவது

# கொலுவகுப்பு.

---

தனதன தனதன தனதன தனதன, தனந்த தனனு தனந்த
தனனு *

அருமறை யவன்முத லரியரன் மகபதி, யனங்க னிமையோ
ரினங்க ளொருபால் *

அருணனு மதியமு மனலெழு கனலியு, மணங்கி னுடெரூழ்
கணங்க ளொருபால் ($\frac{1}{4}$)

வருணனு நிருதியும் வழியொடு தனதனு, மகிழ்ந்து மிகவே புக
ழ்ந்த தொருபால் *

வயிரவ ரொடுபட் டுவணரு முரகரும், வரங்கள் பெறவே யிர
ங்க வொருபால். ($\frac{1}{2}$)

இருடிக ளெவர்களு மினியகி னரர்களு, மிணங்கி யெதிரே
வணங்க வொருபால் *

இப்முக வனுமெழி லிளவல்க ளனைவரு, மியன்ற நெறியே
முயன்ற தொருபால் ($\frac{3}{4}$)

உருமலி குறளின மொடுவசு முசுமுக, னுறைந்து பரிவாய் நிறை
ந்த தொருபால் *

ஈடுமொடு கடவுப னிருவரு முறைமுறை, புகந்து தொழவே மிகுந்த தொருபால் (1)

அடல்விடை முகனறை கதையுற வெகுசன, மதுங்கி யருகே யொதுங்க வொருபால் *

அயன்முடி திருகிய வயவனு நியமமொ, டடங்கி வலமே தொடங்க வொருபால் (1¼)

மடல்புனை புகரொடு வருபதி ஞெருவரு, மருங்கி னுறவே நெருங்க வொருபால் *

மருவொடு துவரிரு வருபிசை வலமொடு, வசிந்து மனமே கசிந்த தொருபால் (1½)

மிடலிறை விறலரி விமலர்க ளருள்சுதன், வியந்து விரைவாய் நயந்த தொருபால் *

வெயில்விரி சுடரவன் மகனொடு மதிமகன், விளம்பு முறையே கிளம்ப வொருபால் (1¾)

உடலொளி மவுனிக ளுடனுப னிடதரு, முளங்கு ளிரவே விளங்க வொருபால் *

உமைதிரு மகணில மகள்கலை மகளொடு, முகந்தெ வருமே தொகுந்த தொருபால் (2)

அதிபகி ரதிபயி ரவிபக வதிசசி, யரம்பை .யருமே நிரம்ப வொருபால் *

அழகிய கவுரியொ டிலகிய வலவையு, மடைந்து தயவாய் மிடைந்த தொருபால் (2¼)

மதியர சருநிறை வசியரும் விவேனுரு, மலிந்து முகமே பொலிந்த தொருபால் *

வருசிவ னடியவ ரரகர வெனமுறை, வழங்கு கடல்போன் முழங்க வொருபால் (2½)

விதிமுறை கருதியை வகைபுரி கருவிகள், விளைந்த வொலியே னிளைந்த தொருபால் *

விதமுட னபிநய வனிதையர் சதிமுறை, விரிந்த நடமே புரிந்த தொருபால் (2¾)

உதிர்தரு மலர்விரை யுறுபுகை யிர்கமத, முமிழ்ந்த மணமே கமழ்ந்த தொருபால் *

ஒழுகிய கிரிதொடு பணிதம தடுசுட, ருவந்த வொளியே நிவந்த தொருபால் (3)

அரியக டெனமுக டளவிய வொருகுடை, யமர்ந்த நிழலே சமைந்த தொருபால் *

அருமட வனமென விருபுடை கவரிக, ளசைந்த வழகே யிசைந்த தொருபால் (3¼)

வரிசைசெய் துயிலொடு வனமயில் சிவிறியின், வயங்கு சிறுகா லியங்க வொருபால் *

மறுகட லினிலெழு நிறைமதி யமுதென, வரிந்து பனிநீர் சொரிந்த தொருபால் (3½)

விரியிருள் வலிதரு கிரணம தெனநல,மிகுஞ்சு முலில்வீசு குஞ்ச மொருபால் *

வியன்மர.கதமணி யிளிர்தரு களசெதிர், விரைந்து நிரையாய் நிரைந்த தொருபால் (3¾)

உரியவெ ளிலையுட னுயரிய கமுகினி, லுகுந்த கனியே பகுந்த தொருபால் *

உலகுள வனிதைய ரவரவர் விரதமொ, டுணர்ந்து கனியே கொணர்ந்த தொருபால் (4)

அறுகதி ரவரென வறுமணி மவுலிக, ளடர்ந்து வெயிலே படர்ந்த தொருபால் *

அறுமதி யெனவறு திருமுக சததள, வலர்ந்த மலரே மலர்ந்த தொருபால் (4¼)

மறுவறு கடலென மருவுப னிருவிழி, வழிந்த வருளே பொழிந்த தொருபால் *

வினைதரு மகரமு மணியணி பணிகளும், வயங்கு குழையே தயங்க வொருபால் (4½)

இறுகுபொன் மலையொடு மிடறுப னிருபுய, மிசைந்து நெடுவானசைந்த தொருபால் *

எழிலியை யனையப னிருகையி லயின்முத, லிலங்கு படையே துலங்க வொருபால் (4¾)

உறுவரை யருவியை நிகர்தரு முரமிசை, யுடன்கொள் புரிநூல் கிடந்த தொருபால் *

உருமென விகலிமு னெதிர்பொரு மவுணரு, ளுடைந்த வுடைவாள் சிறந்த தொருபால் (5)

அனவரதமுமறை முறையிடு பரிபுர, மலங்கு மிருதாள் குலுங்க வொருபால் *

அளவறு கலவியின் முழுகிய குறமக, ளமர்ந்து வொயிலாய் நிமிர்ந்த தொருபால் (5¼)

வனதரு வினிலுறை சதமக னருண்மகள், வதிந்து மணமே பொதிந்த தொருபால் *

வருமடி யவரிடம் வலியசனதம்வர, வளர்ந்த சபையே கிளர்ந்த தொருபால் 5½)

நினைவொடு பணிபவர் வினைதுகள் படவெதிர், நினைந்து திருநீறணிந்த தொருபால் *

நிறைமலரொடுநல கலவையு முயர்குரு, நினைந்து தரவே புனைந்த தொருபால் (5¾)

தினகர னுலவுச ஊிதியினி லிரவலர், தெளிந்த தமிழே டொழி ந்த தொருபால் *

சிவபர கிரியினி லொருசிவன் வடிவொடு, திருந்த முருகோ னிருந்த கொலுவே. (6)

கொலுவகுப்பு முற்றிற்று.

இருபத்தொராவது

## வீ ர வா ள் வ கு ப் பு.

தானன தத்ததன தானன தத்ததன, தானன தத்ததன தந்த னத் தனன *

பூவுளோ னுக்குமுயர் தேவர்கோ னுக்குமெழு, பூவில்யா வர்க் கும்வரு துன்புதீர்த் திடுமே *

பூதசே னைக்குமொரு கோடிசூர் யப்ரபை, போலமா யக்கரிய கங்குனீக் கிடுமே *

பூதிபூ சிப்பரமர் தோலைமே லிட்டதொரு, போர்வைபோ னெட்டுமை மருங்குசேர்த் திடுமே *

போரிலே நிர்த்தமிடு வீரமா லக்ஷ்மிமகிழ், பூசைநே சித்துமலர் தும்பை சாத்திடுமே (¼)

பாவரு பக்கொடிய சூரனோர் பெற்றபல, பாலர்மா ளத்தசைக ளுண்டுதேக் கிடுமே *

பானுகோ பப்பகைஞன் மேனிசோ ரக்குருதி, பாயவே வெட்டியிரு துண்டமாக் கிடுமே *

பாடுசேர் யுத்தகள மீதிலே சுற்றுநரி, பாறுபேய் துய்த்திட நிணங்களூட் டிடுமே *

பாடியா டிப்பொருத போரிலே பத்திரக, பாலிசூ லப்படையை வென்றுதாக் கிடுமே (½)

ஆலவா கத்துதிசெய் பாவலோர் மெய்க்கலிக, ளாமகோரக்
களைக ளைந்துநீக் கிடுமே *

யாருமே யற்றவனென் மீதொரா பத்துறவ, ராமலே சுற்றிலுமி
ருந்துகாத் திடுமே *

ஆடல்வே ணற்படைக ளாணையா வுக்குமுத, லாணையா வைத்து
வலம் வந்துபோற் றிடுமே

ஆலகா லத்தைநிகர் காலசூ லத்தையும, ருதபா சத்தையும ரிந்து
போட் டிடுமே (¾)

மேவலார் முப்புரமு நீறவே சுட்டவொரு, மேருவாம் விற்பரமர்
தந்தபாக் கியவான் *

வேடர்மா னுக்குமுயர் தேவயா னைக்குமிசை, வேலர்தா ளைத்
தொழுது யர்ந்தவாழ்க் கையினன் *

வீறுசேர் மிக்ககண நாதனு ரெட்டுவகை, வீரர்நே யத்தமைய
னென்றதோட் டுணைவன் *

மேன்மையாம் லக்ஷாரத வீரர்பூ சிக்கவரு, வீரவா குத்தலைவன்
வென்றவாட் படையே. (1)

வீரவாள்வகுப்பு முற்றிற்று.

---

இருபத்திரண்டாவது

# சிவகிரிவகுப்பு.

---

தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த, தனதானனு *

மெத்த மெத்த வக்ர மத்தின் மெத்த மெத்த விக்ர மத்தின்
மெத்த மெத்த வுக்ர வெற்றி, மிகுபாசமே *

விட்டு விட்டு றுக்கு றுக்கு கட்டு கட்டு குத்து குத்து வெட்டு வெட்டெட னச்சி னத்து, நமனுடியே (¼)

சத்த மிட்ட தட்டி நெட்டெ யிற்றி னேக்க டித்து றுக்கு தர்க்க மிட்டெனேப்பி டிக்க, வருபோதிலே *

தத்த ளிக்கும் புத்தி யைத்தி டப்ப டுத்தி யொத்தி டத்த ணிப்பு றுத்தி மெய்த்து ணேக்கு, வரவேணுமே (½)

எத்த லத்து மெப்ப திக்கு மெப்ப டிக்கு மெச்ச ரித்து நற்ப தத்தை யுச்ச ரிக்கு, நினைவாகியே *

இட்டம் வைத்த வர்க்க நுக்ர கச்ச முத்ர வித்தை யிற்ப்ர சித்த நித்ய மூத்த மிழ்க்கு, மருள்போதனே (¾)

அத்ர பத்ர சித்ர மிட்ட யிற்ப டைத்த யிற்கி ணேத்த லர்க்க ணுற்ற பொற்கு றத்தி, மணவாளனே *

அத்த னுக்கு மைக்கி தத்த புத்ர சித்தி முத்தி யைச்செ யற்பு தச்சி வக்கி ரிக்குண், முருகேசனே. (1)

சிவகிரிவகுப்பு முற்றிற்று.

---

இருபத்துமூன்றாவது

# திருச்செந்தில்வகுப்பு.

தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த, தனதானன *

சந்த பந்த மூந்து விந்தை செஞ்சொ லின்ப்ர பந்த நந்து சங்க மங்க லம்பொ ருந்து, தமிழ்பாடியே *

தஞ்ச மென்று சென்று சென்று நஞ்சு விஞ்சு நெஞ்ச வஞ்சர் தங்கண் முன்பு நின்று நின்று, மெலிவோதியே (¼)

சிந்தை நொந்து சொர்ந்து நைந்து நைந்து வெம்பி வெம்பி யங்கி
சிந்தி யிந்த வெங்கு டம்பை, யழிபோதுமா *

சிங்க முன்பு குந்த தந்தி யின்கு லங்க லங்கு பண்பொ சிந்த
துன்ப மென்றொ ழிந்து, கரையேறுவேன் (½)

அந்த ரங்க ளண்ட ரண்ட மண்ட லங்கு லுங்க நின்ற சைந்த
சைந்து பங்தெழும்ப, வசுராதியோர் *

அங்க டங்க டுண்ட துண்ட கண்ட பந்தி சண்டை வந்த லைந்து
ருண்டு மண்டை சிந்த, வடர்கோபனே (¾)

கந்த சந்த நுங்கு கும்ப கொங்கை யிந்தி ரன்ம டந்தை கங்க
ணம்பு ரந்த வென்றி, யணிநேயனே *

கம்பு மஞ்ச முந்தி கழ்ந்தி ருந்தி டுந்தி றஞ்செ றிந்து கஞ்ச
நன்ற லர்ந்த செந்தின், முருகேசனே. (1).

திருசசெந்தில்வகுப்பு முற்றிற்று.

---

இருபத்துநான்காவது

## திருப்பழனிவகுப்பு.

தந்தனன தந்தனன தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்தனன தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தனதானன *

எந்தவினை யும்பவமு மெந்தவிட மும்படரு மெந்தவிக லும்பழியு
மெந்தவழு வும்பிணியு மெந்தவிகழ் வுங்கொடிய வெந்தவசி யுஞ்
சிறிது, மணுகாமலே *

எந்தவிர வுந்தனிமை யெந்தவழி யும்புகுத வெந்தவிட முஞ்
சண்பயி லெந்தமுக மும்புகலு மெந்தமொழி யுந்தமிழு மெந்தவிசை
யும்பெருமை, சிதருமலே (¼)

வந்தனைசெய் துன்சரண நம்புதல்பு ரிந்தவருள் வந்தனுதி னூந்
தனிலு நெஞ்சினினை வின்படிவ ரந்தரவு வந்தருளி தம்பெறுவ
தன்றிநெடு, வலைவீசியே *

வஞ்சவிழி சண்டனுறு கின்றபொழு துங்குமர கந்தவென நன்
கறைய வுந்தெளிவு தந்துயிர்வ ருந்துபய முந்தனிமை யுந்தவிர
வஞ்சவென, வரவேணுமே (½)

தந்தனன தந்தனன டிண்டிகுடி டிண்டிகுடி குண்டமட குண்ட
மட மண்டமென நின்றுமுர சந்திமிலை பம்பைதுடி திண்டிமமு
ழங்குமொலி, திசைவீறவே *

தண்டவமர் மண்டசுரர் மண்டைநிண மென்றலகை யுண்டுமிழ்
தல் கண்டமர ரிந்திரன் வணங்குபத தண்டைசிறு கிங்கிணி புலம்
பிடவ ரும்பவனி, மயில்வாகனு (¾)

செந்தளிரை முந்துபட மென்றுளம ருண்டுசிறை சந்தன வனங்
குலவு மந்திகுதி கொண்டயல்செ றிந்தகமு கின்புடைபட துங்கி
டவ ளைந்துமியிர், மடல்சாடவே *

சிந்தியவ ரம்பைபல வின்கனியில் வந்துவிழ மென்கனியு டைந்
தசுளை விண்டுநறை கொண்டுசிறு செண்பகவ னங்கள்வளர் தென்
பழனி யம்பதியின், முருகேசனே. (1)

திருப்பழனிவகுப்பு முற்றிற்று.

---

இருபத்தைந்தாவது

## திருப்பரங்கிரிவகுப்பு.



தான தந்தன தான தந்தன தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன தான தந்தன தான தந்தன

தான தந்தன தான தந்தன தான தந்தன தான தந்தன
தன தானன *

சாதி யுங்குல மாவ துங்குடி யாவ துஞ்சன மாவதுங்கிளை தார
முந்திர பால ரும்பிர தான மும்பெரு காண்மை யும்பெறு தான
மும்பகு மான முஞ்சிவ ஞான மும்பல கோல மும்புரி,தொழிலோ
டுமே *

தாழ்வ கன்றிடு வாழ்வும் வெம்பிணி நோயு மங்கதி லாதூரத்
தனி லாவ துந்தளர் சாவொ ழிந்திடு யோக முஞ்சிவ பேறுமெந்
தனி தான முஞ்செய்த ராசு கண்டது போல்வ நும்பொது வாகு
மென்றுன, திருதாளேயே (1/1)

ஓதி னெஞ்சய ரார்தி னந்திரி காலமுந்தொழு வோர்வி ரும்பிய
தேது மன்புட னேத ருங்கிர்பை யாக வந்தனு பூதிதந்துமு னூல்க
டந்திட வேபு ரந்தருள் கூரு மிங்கித சேவை நம்பிய, படிகா
ணவே *

ஓகை வந்தனை யாய்வ ணங்கிய வேழை சிந்தையு ளேகினெந் திடு
வேளை வந்தினி தாய்வ ரந்தர வேணு மென்றக மேவ ருந்தியு
மோதி னன்றின நான்வி ளம்புத னீய றிந்துமி தேனிரங்கிலை,
யறிவேனையா (1/2)

ஆதி யந்தம ளுதி விந்துவு நாத மும்பிரி யாநி றைந்தவ் ரூபவி
ன்ப சொரூப சுந்தர சோதி மின்பொலி நீதி யம்பொரு ளாக நின்
றப ராப ரன்கரு ணைல யன்புல வோரி றைஞ்சிட, வெதிர்
காளிவா *

தாட லின்செக சேகி ணங்கிண சேகு டண்டம டாட மண்டம
தாகி ணங்கிண தோதி ணங்கிண தாதி மிந்திமி தோவெ னுந்
திதானி யார்சி லம்பொலி தாள மிஞ்சிட வோ டம்புரி பாத நம்பர,
னருள்பாலனே (3/4)

மாதி ரந்திசை யாக வந்திக டாச லந்திரை மாச லம்புவி மாக
மண்டக டாக மும்பொனின் மேருவின்றலை யேகு லுங்கிட வாச
மொன்றிய கால்பொ ருந்துகள் வானி ரம்பிட வேவ ருங்கதிர்,
வடிவேலனே *

வான ரங்கதிர் தாவு தண்டலை மேவு கொண்டலை யூடு நின்றலை
மாவி னங்களி கூரு நண்பொடு கோக நஞ்செறி பால வந்திகழ்
பேர்சி றந்திரு மூவர் விஞ்சையர் சூழ்ப ரங்கிரி, முருகேசனே.()

திருப்பரங்கிரிவகுப்பு முற்றிற்று.

---

## திருவகுப்பு முற்றுப்பெற்றது.

வேலுமயிலுந் துணை.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய

# சிவபராக்கிரமம்



ஒப்பு ஒதி முதலீறில்லாத சிவபெருமான் தம்மடியார்க்கு அனுக்கிரகஞ் செய்யும் வண்ணஞ் சகளீகரித்த அறுபத்துநான்கு மூர்த்தங்களே சிவபராக்கிரமம் எனப்படும். இவ்வரியநூலைச் சிறந்த செந்தமிழ்நடையில் செவ்வனே பயின்று பன்னூல்கள் உரையெழுதியும், சில நூல்கள் மொழிபெயர்த்தும் விளங்கும் சென்னை கிறிஸ்டியன்காலேஜ் மாஜி தமிழ்ப்பண்டிதரும் சைவப்பிரசாரணருமாகிய ஈக்காடு. இரத்தினவேலுமுதலியார் அவர்களால் தமிழ் வசன நடையிலியற்றி அவ்வவ்வற்புதங்களை நேரிற்கண்டனபோல விளக்கத்தக்க 64-திவ்ய திருவுருப்படங்கள் சிற்பநூல் விதிவழுவாது எழுதியமைத்து, முக்கியமான யிடங்களில் வேதம், உபநிஷதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய பல வடநூல் மேற்கோள்களும், தமிழ்நூல் மேற்கோள்களும் காட்டி அச்சிட்டு அழகாகப் பயிண்டு செய்துள்ள இந்நூல் இன்றியமையாதது. இதிலுள்ள திருவுருவங்கள் பூசிக்கத்தக்கன.

புத்தகத்தின் விலை ரூபா-2.

இப்படிக்கு,

**முத்துவடிவேல் முதலியார்**

நெ-24, சாண்டவராயப்பிள்ளை வீதி,

சென்னை.